உ

வேலுமயிலுந்துணை.

பாண்டித் தமிழ்நாடெங்கும் புகழ்பெற்ற
டிராமாக் கம்பேனியார்கள் யாவரும் பாடிவருகிற
புதிய நூதன வர்ணமெட்டுகளடங்கிய
திருச்செந்தூர் ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமி பேரில்

# இன்பரசக்
# கீர்த்தனைப்பதம்.

இரண்டாம்பாகம்.



இவை
திருமந்திரநகரெனுந் தூத்துக்குடி
புஸ்தக வியாபாரம் தமிழ் வித்வான்,

**வே. சி. சாமிதாசனுலியற்றி**

௸ யாரால்,

தூத்துக்குடி,
...யுதம் பிரிண்டிங் பிரஸில்,
...ிப்பிக்கப்பெற்றது. [1000

1918. (அணா 1.

உ

வேலுமயிலுந்துணை

# திருச்செந்தூர் சுப்பிரமணியர் இன்பரசக் கீர்த்தனைப் பதம்.

(இரண்டாம் பாகம்)

## விநாயகர் துதி.

### பொது விருத்தம்.

சத்திமகிழ் சித்திவிநாயகனருள் போற்றி
சரஸ்வதி தன்னடியிணைகள் மிகவும் போற்றி
எத்திசையும் புகழ்வேலன் பாதம்போற்றி
யீசனரி கேசவன் றன்னருளைப் போற்றி
நத்தியே பக்தர்கள் தன்னடியைப் போற்றி
நாளும் மதிப்புலவர்களை மகிழப்போற்றி
முத்திதருஞ் செந்தூர் வாழ்முருகன்மீது
முடிக்கின்றேன் இன்பரசம் படிக்கின்றேனே.

## சுப்பிரமணியர் துதி.

### 1-வது விருத்தம்.

ஆண்டவனருளும் நீதா அவனியோர் போற்றும் பாதா
பாண்டிய தேசமெங்கும் பரவிய ஞானபோதா
நீண்டவுன் புகழைப்பாடி நிகழ்திடச் சாமிதாசன்
வேண்டினேன் செந்தூர்க்கந்தா வேளை வந்தருள் செய்வாயே.

(2-வது) கழுகுமலைக்கு நாம் என்ற மெட்டு.

பல்லவி

சித்திர மா மயிலேறி அருள்
செய்திடவுங்கோறி வாரீர் (சித்திர)

அனுபல்லவி.

சித்தனே சுத்தனே கர்த்தனே
நித்தமும் பக்தனை நத்தியே (சித்திர)
சீக்கிரம் நோக்கிய வினைகளை
நீக்கிய பாக்கியா வாக்கருள் (சித்திர)
சிறியே னுனை மரவா தனு
தினமே துதிபுரி வேனுயர் (சித்திர)

சரணங்கள்.

நித்திரையி னுனை யெத்தினமு மெந்தன்
நெஞ்சமதில் நினைந்தேயுருகி நொந்தேன்
சித்த மிரங்கியருள் செய்குவா யுந்தன்
சேயன்றமிழ் சாமிதாசன் பாடல் தந்தேன்
சீலனே 'சகமதுவும் புகழ்
வேலனே வள்ளி தெய்வானையின்
லோலனே அன்பர்களுக்கனு
கூலனே பாலனையாள் தினம் (சித்திர)

(3-வது) செந்தூர்வாசா வந்தாளீசா என்ற மெட்டு.

பல்லவி.

கந்தா வாசா வந்தா ளீசா
கானமா மயிலேறியே (கந்தா)

அனுபல்லவி.

தந்தைதாய் குருவெனத்தானெண்ணியே தினமுன்
ருளினில் மலரேழை பெய்தென்
ளுமே துதிவேளை செய்குவேன் (கந்தா)

சரணங்கள்.

முந்தருளைத்தந்தாள் முற்றும்
முருகனே யெனைக்காப்பாற்றும் (மு)
வந்துமுனி அந்தமுள வள்ளிபடந்தான் கொடுக்க
வனத்தினிற் றினைப்புனத்தினிற் சென்று
கணத்திற் றிருமணமுடித்த வா (கந்தா)

மன்னர்போற்றும் முன்னோரேற்றும்
மால்மருமகனே வாவா (ம)
நன்னயஞ் சேறன்னை யெனும் நாயகி வள்ளிதெய்வானை
நாதனே மலர் பாதனே தர்ம
நீதனே யென்வாதனை தீரக் (கந்தா)
முன்னமே உன்பேற்கவிதை
முடித்தேனே பலவா தேவா (மு)
பின்னமு மெனக்கருளை யீன்றருளுஞ் சாமிதாசன்
பிதத்துடன் நயம் பதத்துடன் பல
விதத்துடன் பாட மிகுத்தருள் செயக் (கந்தா)

(4-வது) அடி மானே உன்னால் என்ற மெட்டு.

கண்ணிகள்.

(எடு) ஆண்டவா செந்தூரில் வாழும் அய்யனே காவா (எடு)
தாண்டவ மாடியசிவன் றன்னருமைப் பாலனேவா
தாலமதுள்ளோர்க்கும் மனுகூலனே வடிவேலவா
தாஷ்டிகச் சூரரை வென்றவா
தேவசபைக்குந்
தானேயொரு கோனேயென்றும்வா
எனக்கருளைத்
தான் கொடுத்திடவே நினைத்துனை
யேதுதித்தேனே மாநிலம் புகழ (ஆண்ட)

(பஞ்ச) பாண்டவர் சகாயனரிமால் மருமகனே (பஞ்ச)
வேண்டி யுனைத்துதித்தேன் வினைகளகற்றியெனை,
ஆண்டருளுங் கர்த்தனே அநுதினமு மறவேன்
ஆறுமாமுக வேலனே லோலா
அநுதினமுங்
கோருமன்பர் களுக்கனுகூலா
அந்த
அருணகிரியார் சரணமறிந்து
தருணமதனில் கருணைபுரிந்த (ஆண்ட)

(புள்ளி) மானீன்ற வள்ளி திருமாதைத் தேடியே (புள்ளி)
கானில்வேடனாகியதி கனவளையற் செட்டியுமாத்
தானுகிப்பரணரிகின் தன்னிலோர் வேங்கைமரத்
தாமொருகிழப்பருவமர்ச்
சுனையருகின்
தண்ணீருண்ண எண்ணந்திண்ணமாக்
கரி முகவனைக்
தானினைத்துமே காவனக்குர
மாதையே திருமாமணஞ்செய்த (ஆண்ட)

(என்றும்) நானினைத்தே னருள் செய்நாதனே கோனே (என்றும்)
தேனைநிக ரொத்தமொழி தெய்வானை வள்ளியுடன்
கானமயில் மீது வந்தென் கவலைக ளகற்றிடுவாய்
கார்திகேயனே
சாமிதாசன்
கவிக்கும் நேயனே
உந்தன்
கருணைபுரியத் தருணமிதுவே
சரணஞ்செய்கிறே னென்றுமே யெனை (ஆண்ட)

(5-வது) காதலாகுதடி என்ற மெட்டு.

கண்ணிகள்.

ஆறுமாமுகனே தினம் வாருமே குகனே
அருள்தாருஞ் சண்முகனே, உல
காதியே சிவ சோதியே தவ
நீதியே யிந்த மேதினிபுகழ் (ஆறு)

சீருகந்தவேனே செந்தூரில் வந்தவனே
யிந்தச்செகம் புகழ்ந்தவனே உன்
சேவடிப்பத மாவலுற்று யான்
தினந்துதித்திட மனமிகுத்தருள் (ஆறு)

பார்வதி பாலா திருப்பறங்குன்ற வேலா
பரமேஸ்வரன் சீலா பரி

சுத்தனே சிவசித்தனே ஞான
முத்தனே உந்தன் பக்தனைக்காரும் (ஆறு)
நேரினில்வாரும் கலிநீங்கிடப்பாரும்
அருளோங்கிடத்தாரும் இந்த
நீனிலம் புகழ் மானிலத்தினில்
நேசம் ஆள் சாமிதாசனைக்காரும் (ஆறு)

6-வது அய்யா பழனிமலை வேலா என்ற மெட்டு.

பல்லவி.

செந்தூர்பதி யமர்ந்த வாசா நின்
சேர்வை தந்தாள் குமரேசா (திருச்)

அனுபல்லவி.

வந்தாதரிப்பாய் தவநேசா நான்
வாழ்த்தித் துதித்தேன் முருகேசா (திருச்)

சரணங்கள்.

கந்தா கடம்பா கதிர்வேலா திருக்
கார்த்திகேயனே வள்ளி லோலா (கந்தா)
பந்தவினையகற்றுஞ் சீலா அருள்
பாதம் பணிந்தேனுமை பாலா (திருச்)
எந்தாய் தந்தை குருவும் நீயே அல்லால்
ஏது துணையருள் செய்வாயே எந்தா
சொந்தமுன தடிமைச்சேயே எனைச்
சோதியாதே வருவாயே (திருச்)
தந்தைக்கும் பிரணவ போதா நீயே
தானே யுரைத்த ஞான நீதா தந்தை
சந்தாசலச் சண்முக நாதா சாமி
தாசனைக் காத்தருள வாதா (திருச்)

(7-வது) மாரன்வாதை யகோரம் என்ற வர்ணமெட்டு.

கண்ணிகள்.

பார்ருமேயருள் தாருஞ் சண்முகனே (கண்)
பரமன் மகனே திரஞ்செய் குகனே

பார்வதிக்கொரு சேயனேசுகனே உந்தன்
பதத்தினைத்தொழக் கதித்துதித்தெனை
மதித்திடப் புகழுதித்திடக் கண் (பாரு)
வாருமே வினைதீருமே மெய்யா (தினம்)
வடிவேலய்யா அடியேனைய்யா
வாடியு முனைத்தேடி னேன்றய்யா எந்தன்
வருத்தந்தீரெனக் கருத்திலிருத்தி
திருத்தமா மலர்பரித் துதித்தேன் (வாரு)
பாண்டியில் செந்தூரிலாண்டியே (தென்)
உனைவேண்டியே தினம் அண்டியே
பாதம்பணிந்தே நான் கண்டியே பரி
சுத்தனே ஞான முத்தனே உந்தன்
பக்தனைக் காரும் நித்தமுந்தன் (பாண்டி)
ஆண்டருளும் வேண்டினேன் நானே எனை
தினமுடனே மனமாய்தானே
ஆதரித்தெனை யாளுவாய் கோனே தமி
ழற்புதஞ் சாமிதாசனுக்கருள்
விற்பனஞ்செயுந் தற்பராயெனை (ஆண்ட)

(8-வது) வருவாய் மயிலேறி என்ற மெட்டு.

பல்லவி.

திருவாய் திறந்தருள்வாய் செந்தூர்
தேசிகனே மயில் வாசியமர்ந்தவா (திரு)

அனுபல்லவி.

தருவாயுனதரு ளெனக்குமுன்
றந்தைக்குபதேசஞ் சிந்தைகுளிர்ந்திட
குருவா வுருவா உரைத்த
மருவே திருவே மிகுத்த
கோனே பெருமானே வர்ந்
தருவாய் வினையருவாய் தினம்
வருவாய் புகழ்பெருவாய் மனந்

தநீனே சாமிநாதசனுக்கருளுர
னவனே யெனக்குமுன் (திரு)

சரணங்கள்.

முந்தவே நாரதமுனி தந்ததோர் படங்கள் பார்த்து
அந்தரி விந்தையாத் தந்திடுஞ் செந்திருவேலுடனேகியே
சிந்தை குளிர்ந்து தளர்ந்து
வளர்ந்து யெழுந்து வனமுருஞ்
செயகுஞ்சரி குரவள்ளியை
கவமிஞ்சகமோடு துள்ளியே
சேர்த்து வஞ்சியை மணந்து
காத்த ரஞ்சித மிகுந்தவன் (திருவாய்)

(9-வது) மானமதுரை என்ற தெம்மாங்கு மெட்டு.

பின்முக்கு.

தேவாதி தேவர் புகழ் சிறந்த
திருமால் மருமகனே வுயர்
திருமால் மருமகனே எனைக்
காவா வெனப்போற்றினேனே அருள்
கந்தனே வுன்பாதம் நானே யெக்
காலமுற மித்தாலமதில் சிலமுடனே மறவேன் (கந்த)
வாவாவென்றழைத்தேனே செந்தூர்
வாழுங் குமரேசா வுனை நாளும்
வாழுங் குமரேசா வுனை எந்தன்
நாவதினல் தினமுனைப் பாடி
நான்துதித்தேன் காரெந்தனை குரு
நாதனே வுன்பாதமதை நாளு மசவாதடியேன் (நா)
தீதான குற்றங்களை மிகவுந்
தெரியாது செய்தாலேழை உனை
அரியா துய்தாலுங் கோழை தனை
மாதா பிதா காப்பதுபோல் சிறு
மதலையெனைக் காத்தருள்வீர் திரு

மால்மருகனான வுயர் வேல்முருகனே (சிறு)

ஆதாரம் உன்னையன்றி எனக்
கில்லையென்றும் நம்பினேனே எங்கும்
இல்லையென்றும் வெம்பினேனே உன்
பாதாரங்கதி தானே என்றும்
பாலன் சாமிதாசன் நானே போற்ற
பாருந் தினம் வாரும் வினைதீரு மருள் தாருந் சிறு (பால)

10-வது) வங்சார மார்பிலணி என்ற மெட்டு.

ஆதியிலசுரர் குருவான சுக்கிரவானுலை கி
சோதிமிகுகால கேயனான மகளான மாயை
தாதிபோல லங்கரித்ததி நயமுடனுரைத்து—விஞ்சையாக

காதிலோதியு மவளுக்குக் காசிபர் தபசிதனை
நீதியாகவே கலைத்து நீவாவெனவே யனுப்ப
வீதிவிலை மாதரைப்போலே யவளுமேகூடிட—மிகவான

சோலைத் தபசுரிஷிகள் சொன்னது போற்றங்குமென
வாலைமதன் போலசுரன் பன்மன் சிங்காமுகாசூரன்
சாலமெகாமுகா சூரனைவர்களை யீன்றிட—கிளையாக

மேனுல வீரமகேந்திர மேன்மையான பட்டணமா
சிலமுடனே யமைத்துச் சென்றகிருத் தேவரெல்லாம்
தாலமதிலே பணியத்தானே செய்துமேயவர்கள்—வருநாளில்.

தேவர்களைக் காக்கச்சிவன் றிருவுளம் வைத்தன்னுள் பிர்மா
காவன விஷ்ணு ருத்திரன் கருணைச்சதா சிவன்முதலோர்
யாவரு மகேஸ்பரன் மனோன்மணி யறுவர்களு—மொன்றுகூடி

பாவமகற்றும் பரமன் பார்வையக் கனிக் கண்ணதில்
ஆவலுடனே பிரந்து ஆறுமுக வேலனென
தாவழுஞ் சரவணப்பொய் கையிலதி தீரனென—வயதாகி

அந்தரி பார்வதியம்மனுக்குப் புத்திரனாகியதி
அம்சவாகனமீதேறி அம்மைபராசத்தியையே
அந்தநிமிஷமே வேலாயுதமாகக்கொண்டசுரர்—கூட்டங்களை

விந்தையதாய் வென்றதிக வீரனெனப் பேருமுற்றுப்
சிந்தையுள சாமிதாசனுக் கருளெனக்குமருள்
செந்திநகர் வந்தமறந்த அந்தரிபுதல்வ—னானமுருகோனே

இரண்டாம் பாகம் முற்றிற்று.



இன்னும் மூன்றும்பாகஞ் சீக்கிரம் வெளிவரும்.

உ

வேலுமயிலுந்துணை

திருமந்திர நகரெனுந் தூத்துக்குடியில் புஸ்தக வியாபாரஞ்செய்யும் தமிழ் வித்துவான்

வே. சி. சாமிதாசனுலியற்றிய

# தினுசுகளின் விளம்பரம்.

திருச்செந்தூர் காவடிச்சிந்து.
ஷை இரண்டாம் பாகம்.
ஷை இந்துஸ்தான் பஜனைக் கீர்த்தனம்.
இன்பரசக் கீர்த்தனைப் பதங்கள்.
மாசித்திருநாள் வழிநடைத் தெம்மாங்கு.
ஷை இரண்டாம்பாகம்.
குரங்கணியூர் வழிநடைச் சிந்து
ஏறல் வழிநடைச்சிந்து.
மேற்படி பேயோட்டும் சிந்து.
பிரிவுகாண்டம்.
முள்ளிச்செவல் தீக்கோள் சிந்து.
மண்ணெண்ணைக் கப்பல் சிந்து.
மேற்படி இரண்டாம் பாகம்
தாம்பிரவர்ணிநதி அபாயச்சிந்து.
மேற்படி இரண்டாம் பாகம்.
திருச்செந்தூர் வழிநடைச்சிந்து.
மேற்படி இரண்டாம் பாகம்.
கழுகுமலை வழிநடைச்சிந்து.
சங்கரநாராயணர் கோவில் வழிநடைச் சிந்து.
மூன்று சரித்திர நொண்டிச்சிந்து.

இன்னும் அநேக தினுசுகளுந் தயாராகியிருக்கிறது வேண்டியவர்கள் நேரிலும், வி. பி. மூலமாயும், விலை சகாயமாயும், எழுதிப் பெற்றுக்கொள்ளலாம்.

வே. சி. சாமிதாசன்,

புஸ்தக வியாபாரம்,

தூத்துக்குடி.